

# புது ஊஞ்சல்

3-5 வகுப்புகளுக்கான இதழ்

இதழ் 01

திங்கள் விட்டுத் திங்கள்

வெளியீடு: பள்ளிக் கல்வித்துறை
தமிழ்நாடு அரசு





## நண்பனைத் தேடிச் சென்ற கட்டெறும்பு!









ஒரு கட்டெறும்பு தன் நண்பனைப் பார்க்கக் கிளம்பியது.
அந்த இனிய பயணத்தில் அது யாரை எல்லாம் சந்தித்தது?
அறிந்து கொள்ள, 4ஆம் பக்கத்திற்கு வாருங்கள்...







# ஆடுவோம் பாடுவோம்!

ஓடி ஓடி ஆடுவோம்
ஒன்று கூடிப் பாடுவோம்
ஓடி ஓடி ஆடுவோம்!

காக்கை குருவி போலவே
கலந்து நாமும் வாழவே
ஓடி ஓடி ஆடுவோம்
ஒன்று கூடிப் பாடுவோம்!

குயிலும் மயிலும் போலவே
கூடி இருந்து வாழவே
ஓடி ஓடி ஆடுவோம்
ஒன்று கூடிப் பாடுவோம்!

அண்ணன் தம்பி போலவே
அன்பு செய்து வாழவே
ஓடி ஓடி ஆடுவோம்
ஒன்று கூடிப் பாடுவோம்!

– மயிலை சிவமுத்து



ஓவியம்: பா. செந்தில்குமார்

# திருக்குறள்



ஒன்றே முக்கால் அடியாலே
உலகம் தன்னைக் கவர்ந்ததுவாம்.
அன்றும் என்றும் என்றென்றும்
அருமை பெருமை உடையதுவாம்.

பன்மொழி களிலும் வெளியாகிப்
பாரில் பரவி நிற்பதுவாம்.
பொன்மொழி யாவும் நிறைந்தஒரு
பொக்கிஷ மாகத் திகழுவதாம்.

உள்ளத் தூய்மை உற்றிடவும்
உயரிய நன்மை பெற்றிடவும்
தெள்ளத் தெளிய உதவுவது
திருக்குறள், திருக்குறள், திருக்குறளே!

**அழ. வள்ளியப்பா**

ஓவியம் : நீ. நவநீதகிருஷ்ணன்

ஊஞ்சல்

# பதிப்பாளர், ஆசிரியர், விவரம்

# நிலவு




பள்ளியை விட்டு வந்தேனா?
பட்டப் பகலும் மங்கினதா?

உள்ளே வீட்டில் நுழைந்தேனா?
உள்ள சுவடியை வைத்தேனா?

பிள்ளைகள் எல்லாம் வந்தாரா?
பெரிய தெருவில் சேர்ந்தோமா?

வெள்ளி நிலாவும் வந்ததே!
விளையா டும்படி சொன்னதே!

ஓடித் தொட்டோம் ஓர் ஆளை!
ஒளியும் ஆட்டம் ஆடினோம்!

பாடி நடந்தோம் எல்லோரும்!
பச்சைக் கொடிக்கு நீர்விட்டோம்!

தேடிக் கள்ளனைப் பிடித்தோம்!
சிட்டாய்ப் பறந்தோம் வீட்டுக்கே!

ஆடச் செய்தது வெண்ணிலா!
அழகைச் செய்தது வெண்ணிலா!

- பாரதிதாசன்

## உள்ளே...



5 ஆம் பக்கம்

**ஒற்றுமையே வலிமையாம்!**

சண்டை போட்டுக்கொண்ட குரங்குகளுக்கு எறும்புகள் சொன்ன அருமையான யோசனை



7 ஆம் பக்கம்

**அறிஞரின் கலை ஆர்வம்**

பெரிய அறிஞரான இவர், சிறுவயதில் இரவு முழுவதும் தெருக்கூத்து பார்த்து பாட்டியிடம் அடிவாங்கினாராம். அவர் யார் தெரியுமா?



10 ஆம் பக்கம்

**காகிதப் பூனை**

பூனையைப் பார்த்திருப்பீர்கள்... அதைக் காகிதத்தில் செய்து பார்க்கலாம் வாருங்கள்.



15 ஆம் பக்கம்

**பெரிய யானை சின்ன யானை**

யானையைப் பிடிக்காதவர்கள் உண்டா என்ன? உலகின் பெரிய யானை, சிறிய யானை எவை எனத் தெரியுமா?



23 ஆம் பக்கம்

**நரியும் சரியும்**

நண்பர்களோடு கேள்வி - பதிலாகப் பாட்டுப் பாடி மகிழ அழகான பாட்டு காத்திருக்கிறது

# கட்டெறும்பின் பயணம்

– ஜார்ஜ் அலெக்ஸ்

**ஒரு கட்டெறும்பு தன் நண்பனைப் பார்க்க விரும்பியது. குளித்துவிட்டு, நல்ல உடைகள் அணிந்து, முகத்துக்குப் பவுடர் பூசிக்கொண்டது. செருப்பு அணிந்துகொண்டு புறப்பட்டது. அது, நண்பனுக்குக் கொடுப்பதற்கான தின்பண்டங்கள் இருக்கும் பையுடன் நடந்தது.**

அப்போது, பாதையின் ஓரமாகக் கிடந்த ஒரு மண் கட்டி கேட்டது: “கட்டெறும்பே, தனியாகப் போகிறாயே, உனக்குப் பயமாக இல்லையா?”

“இல்லை! எனக்கு ஒரு துணை உண்டு!” என்று சொல்லிச் சென்றது கட்டெறும்பு.



சற்று தூரம் நடந்து சென்ற பிறகு, வேலியில் படர்ந்திருந்த ஒரு கொடி கேட்டது: “கட்டெறும்பே, தனியாகப் போகிறாயே, உனக்குப் பயமாக இல்லையா?”

“இல்லை! எனக்கு ஒரு துணை உண்டு!” என்று சொல்லி விட்டுப் போனது கட்டெறும்பு.

சற்று தூரம் சென்ற பிறகு, மரத்திலிருந்த ஒரு குருவி கேட்டது: “கட்டெறும்பே, தனியாகப் போகிறாயே, உனக்குப் பயமாக இல்லையா?”

“இல்லை! எனக்கு ஒரு துணை உண்டு!” என்று நடந்தது கட்டெறும்பு.

சற்று தூரம் சென்ற பிறகு, ஒரு மலரில் அமர்ந்திருந்த தேனீ கேட்டது: “கட்டெறும்பே, தனியாகப் போகிறாயே, உனக்குப் பயமாக இல்லையா?”

“இல்லை! எனக்கு ஒரு துணை உண்டு!” என்று கடந்தது கட்டெறும்பு.

சற்று தூரம் சென்ற பிறகு, ஊர்ந்து சென்றுகொண்டிருந்த நத்தை கேட்டது: “கட்டெறும்பே, தனியாகப் போகிறாயே உனக்குப் பயமாக இல்லையா?”

“இல்லை! எனக்கு ஒரு துணை உண்டு!” என்று வேகமாக நடந்தது கட்டெறும்பு.

இருட்டிவிட்டது. கட்டெறும்பு தொடர்ந்து நடந்தது. இன்னும் நீண்ட தூரம் செல்ல வேண்டும். நட்சத்திரங்களும், காற்றும், நிலவும் கட்டெறும்பை எச்சரித்தன: “இரவு நேரத்தில் தனியாகப் போகாதே! ஆபத்து!”

“நான் துணையுடன்தான் போகிறேன்!” என்று சொன்ன கட்டெறும்பு இடைவிடாமல் நடந்தது.

மேலும் நீண்டநேரம் நடந்து, தன் நண்பன் இருக்கும் எறும்புப் புற்றை அடைந்தது கட்டெறும்பு. அதைப் பார்த்ததும் நண்பன் எறும்புக்கு மிகவும் சந்தோஷம். இவ்வளவு



தொலைவு தனியாகவா வந்தாய்? என்று வியப்புடன் கேட்டது.

“இல்லை! துணையுடன்தான் வந்தேன்!” என்று பதில் சொன்னது நம் கட்டெறும்பு.

“என்ன துணை?”

“உன் மீதான அன்பு கொடுத்த தைரியம்தான்!”

இரண்டு கட்டெறும்புகளும் அணைத்துக் கொண்டன.

ஓவியங்கள் : பா. செந்தில்குமார்



# பறவையின் பாடல்



பறவை
பூந்தோட்டங்கள்
குன்றுகள்
நதிகள்
மரங்கள்

ஓவியம்: நீ. நவநீதகிருஷ்ணன்

ஒருமுறை ஒரு வானத்தில் பறந்து கொண்டிருந்தது. ளுக்கும் களுக்கும் களுக்கும் ளுக்கும் மேலே அது பறந்து கொண்டிருந்தது. அப்போது க்கு மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. அது ஒரு பாட்டுப் பாடியது: “நான் இனிமேல் கீழே இறங்க மாட்டேன். வானத்திலேயே பறந்து கொண்டிருப்பேன்!”

அந்தப் பாட்டைக் கேட்டு ங்களும் மேகங்களும் காற்றும் பூக்களும் சிரித்தன. நீண்ட நேரம் பறந்த பிறகு க்குக் களைப்பாக இருந்தது. ஒரு க் கிளையில் வந்து அமர்ந்தது. அதற்குத் தாகமாக இருந்தது. அதை அறிந்த மேகம் மழையாகப் பெய்தது. அந்த நீர்த் துளிகளைக் குடித்தது. அதற்குத் தூக்கம் வந்தது. அதை அறிந்த காற்று குளிர்ச்சியாக வீசியது. ஒரு காலியான க் கூட்டுக்குள் படுத்து சற்று நேரம் தூங்கியது .

தூங்கி விழித்த பிறகுதான் க்குத் தோன்றியது: “எவ்வளவு உயரத்தில் பறந்தாலும் தன் நிலையை மறக்கக் கூடாது. ஒருவருக்கு ஒருவர் உதவி செய்து வாழ்வதுதான் இயற்கையின் நீதி!”

– செல்வி

# ஒற்றுமையே வலிமையாம்


தாத்தா குரங்கு


எருது


குட்டிக் குரங்குகள்


சிங்கம்

ஒரு இருந்தது. உடல்நிலை சரியில்லாத அந்த எப்போதும் படுத்திருக்கும். அதைப் பார்த்து கள் கேலி செய்து சிரிக்கும். இதனால் மனம் வருந்தும். அதற்கு உணவு கிடைக்கவில்லை.

ஒருநாள், நான்கு கள் ங்கைப் பார்க்க வந்தன. அவற்றைப் பார்த்து கள் பயந்து நடுங்கின. அப்போது ஒரு சொன்னது: “நாங்கள் நால்வரும் சகோதரர்கள். எப்போதும் ஒன்றாகத்தான் இருப்போம். ஒரு எங்களுக்குள் சண்டை மூட்டி எங்களைப் பிரிக்கத் திட்டம் போட்டது. அப்போது இந்தக் தான், “நீங்கள் ஒற்றுமையாக இருந்தால் த்தை வென்றுவிடலாம். இல்லை என்றால் உங்களைத் தனித்தனியாகப் பிரித்துக் கொன்று தின்றுவிடும் என்றது. அன்றிலிருந்து நாங்கள் ஒற்றுமையாகவே இருந்து வருகிறோம். இல்லையென்றால், எப்போதோ அந்த எங்களைக் கொன்று தின்றிருக்கும். இன்றிலிருந்து நாங்களே இந்தக் க்கு உணவு கொண்டு வந்து கொடுப்போம்!”

அதைக் கேட்டு கள் மனம் திருந்தின. ங்கை நன்றாகக் கவனித்துக் கொண்டன.



ஓவியம்: நீ. நவநீதகிருஷ்ணன்

# யானையின் கூட்டாளிகள்

யானை ஒன்று வேக வேகமாகச் சென்று கொண்டிருந்தது. அதைப் பார்த்த குரங்கு, "யானையாரே... இவ்வளவு அவசரமாக எங்கே போறீங்க?" என்று கேட்டது.

"பக்கத்து ஊரில் ஒரு மேஜிக் நிகழ்ச்சி நடக்குது. அதைப் பார்க்கப் போறேன்" என்றது யானை.

"எனக்கும் மேஜிக் பிடிக்குமே... நானும் வரவா?" என்று குரங்கு கேட்டது. குரங்கை தன் முதுகில் ஏற்றிக்கொண்டு யானை நடந்தது. சிறிது தூரத்தில் மயில் ஒன்று எதிரில் பறந்து வந்தது.

"யானையும் குரங்கும் எங்கே போறீங்க?" என்று கேட்டது. மேஜிக் நிகழ்ச்சி பார்க்கப் போவதாகச் சொன்னதும், தானும் வருவதாக அவர்கள் பின்னாலே பறக்கத் தொடங்கியது. தெருவின் வளைவில் நரி நின்றுகொண்டிருந்தது.

"யானை, குரங்கு, மயில் மூன்று பேரும் சேர்ந்து ஊர் சுற்றுகிறீர்களா?" என்று கேட்டது நரி. "இல்லை இல்லை, நாங்க மேஜிக் நிகழ்ச்சி பார்க்கப் போறோம்" என்றதும், நரியும் அவர்களோடு சேர்ந்துகொண்டது.

செல்லும் வழியில் ஒரு கிணறு இருந்தது. அதன் அருகே அவர்கள் வந்தபோது, அங்கே கன்றுக்குட்டி ஒன்று அழுதுகொண்டிருந்தது.

"என்னாச்சு கன்றுக்குட்டி?" என்று கேட்டது யானை.

பதில் சொல்லாமல் அழுதுகொண்டே இருந்தது கன்றுக்குட்டி. அதன் கழுத்தில் யானை தன் தும்பிக்கையால் தடவிக்கொடுத்ததும் அழுகையைக் கொஞ்சம் கொஞ்சமாக நிறுத்தியது.

"நானும் அம்மாவும் மேஜிக் பார்க்கப் போனோம். அப்போ, மேஜிக் செய்யறவரு எங்களை மேடைக்கு வரச் சொன்னாரு. எங்கள் இரண்டு பேரையும் தனித்தனி பெட்டியில அவர் அடைச்சிட்டார். என் பெட்டியைத் திறந்தபோது அம்மா இருந்த பெட்டியைக் காணோம்," என்று சொல்லிவிட்டு மீண்டும் அழத் தொடங்கியது கன்றுக்குட்டி.

அதைக் கேட்ட யானை உள்ளிட்ட எல்லோருக்கும் அதிர்ச்சியாக இருந்தது.

"அப்பறம் என்னாச்சு?" என்று கேட்டது குரங்கு.



"தெரியல... அந்த மேஜிக் மனிதர் மந்திரம் போட்டு என் அம்மாவை மறைய வைச்சிட்டார். நான் அம்மாவைத் தேடிட்டு இருக்கிறேன். இங்கேயும் இல்லை" என்று அழுதுகொண்டே சொன்னது.

"மேஜிக் செய்து யாரையும் மறைக்க முடியாது கன்றுக்குட்டி... அழாதே" என்று யானை ஆறுதல் சொன்னது. கன்றுக்குட்டி அழுகையை நிறுத்தவே இல்லை.

"நீங்க எல்லோரும் இங்கேயே இருங்க" என்று சொல்லிவிட்டு மயில் பறந்து சென்றது. சிறிதுநேரம் கழித்து வந்து, "கன்றுக்குட்டி, உன் அம்மா, நம் ஊர் பூங்கா அருகில் இருக்காங்க. உன்னையைத்தான் தேடிட்டு இருக்காங்க" என்றது.

அதைக் கேட்டதும்தான் கன்றுக்குட்டிக்கு நிம்மதி வந்தது. "எனக்கு அந்தப் பூங்காவுக்குப் போக வழி தெரியாதே" என்று கவலையோடு சொன்னது.

"கவலைப்படாதே... நாங்க உனக்கு வழிகாட்டறோம்" என்றது யானை.

"யானையாரே, மேஜிக் நிகழ்ச்சிக்குச் செல்ல வேண்டுமே?" என்று அவசரப் படுத்தியது குரங்கு.

"குரங்கு தம்பி, அம்மாவைப் பார்க்காமல் கன்றுக்குட்டி அழுகிறது பார், இதைக் கொண்டுபோய் வீட்டில் விடுவோம். மேஜிக் பார்க்க நாளைக்குப் போகலாம்" என்றது யானை.

எல்லோரும் ஒத்துக்கொண்டனர். மயில் வழிகாட்ட, கன்றுக்குட்டியைப் பத்திரமாக அதன் அம்மாவிடம் கொண்டு சேர்த்தனர். ●

–மீனா



– ஓவியம் : ப. செந்தில்குமார்

# அறிஞரின் கலை ஆர்வம்



அந்த ஊரில் தெருக்கூத்து நடந்து கொண்டிருந்தது. இரவு முழுவதும் நடக்கும் நிகழ்ச்சி அது. அங்கே முதல் ஆளாய் உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருந்தான் ஒரு சிறுவன். அருகில் இருந்தவர்கள் தூங்கிவிட்டாலும், அவன் தூங்காமல் விடியும்வரை கூத்தை ரசித்துப் பார்த்தான்.

அடுத்த நாள் தன் நண்பர்களுக்கு முன், தெருக்கூத்தில் பார்த்த கதாபாத்திரம்போல வேடமிட்டு நடித்துக் காட்டினான். பிறகு, வேடத்தைக் கலைக்காமல் அப்படியே வீட்டுக்குச் சென்றான். அப்போது அவன் பாட்டி, 'படிப்பதை விட்டு விட்டு, கூத்துக் கட்டுறியா' என்று அவனை அடித்தார்.

ஆனாலும், அவனுக்குக் கலைகள் மீது இருந்த ஆர்வம் கொஞ்சமும் குறையவில்லை.

ஓவியம் : நீ. நவநீதகிருஷ்ணன்




தினமும், அந்தச் சிறுவனைப் புத்தகம் படிக்க வைத்துக் கேட்பார் தாத்தா. தவறாகப் படித்தால் உடனே திருத்துவார். ஒரு நாள், சிறுவன் ஆங்கிலப் பாடத்தைப் படித்தபோது அவனுக்கு, 'தாத்தாவுக்கு ஆங்கிலம் தெரியுமா?' என்ற சந்தேகம் வந்தது. அவன் வேண்டும் என்றே பாடத்தைத் தவறாகப் படித்தான். தாத்தா 'ம்' கொட்டினாரே தவிர, 'தவறு' என்று சொல்லவில்லை. அப்போது அவன், தாத்தாவுக்கு ஆங்கிலம் தெரியாது என்று தெரிந்து கொண்டான். ஆனாலும், தாத்தாவை ஏமாற்றாமல், பாடங்களைச் சரியாகவே படித்தான்.

தெருக்கூத்தை விடிய விடியப் பார்த்ததும், தாத்தாவை ஏமாற்றாமல் சரியாகப் படித்ததும் யார் தெரியுமா? அவர்தான் தமிழ்நாட்டின் முன்னாள் முதல் அமைச்சர் அறிஞர் அண்ணாதுரை. காஞ்சிபுரத்தில் ஏழ்மையான குடும்பத்தில் பிறந்தவர். தமிழிலும் ஆங்கிலத்திலும் புலமையை வளர்த்துக் கொண்டார். அவரின் பேச்சைக் கேட்க ஆயிரக்கணக்கில் மக்கள் திரண்டார்கள். பெரியாரின் கருத்துகளை ஏற்று அரசியல் பணி செய்தார்.

1967ஆம் ஆண்டில் தமிழ்நாட்டின் முதல் அமைச்சரானார் அண்ணாதுரை. பல்வேறு சாதனைகளைச் செய்த அவர், 1969ஆம் ஆண்டு மரணமடைந்தார்.



- பிரியா

# நரி எங்கே?

– ஷினோரா

தினமும் ஒரு நரி வரும். அடர்ந்து வளர்ந்திருக்கும் முல்லைக் கொடிப் புதர்களுக்கு இடையில் ஒளிந்திருக்கும். அப்போது குட்டி முயல்கள் பள்ளிக்குச் செல்லும். நரி அவற்றை முறைத்துப் பார்க்கும்.

உடனே குட்டி முயல்கள் பயந்து ஓடும். பள்ளிக்குச் சென்றதும் நடந்ததையெல்லாம் டீச்சரிடம் சொல்லும். ஒருநாள் டீச்சர், தலைமை ஆசிரியரிடம் குட்டி முயல்களின் பிரச்சினையைச் சொன்னார்.

தலைமை ஆசிரியர், குட்டி முயல்கள் பாதுகாப்பாக வருவதற்கு ஒரு வண்டியை ஏற்பாடு செய்தார். அந்த வண்டியை, 'குனுங்கி', 'மினுங்கி' எனும் இரண்டு ஆடுகள் இழுத்து வந்தன.

முல்லைப் புதர்களுக்கு அருகில் வரும்போது குட்டி முயல்கள், அங்கே ஒளிந்திருந்து பார்க்கும் நரியை ஆடுகளிடம் காட்டும். ஆனால், ஆடுகள் அந்த முல்லைக் கொடிகளை மட்டும்தான் பார்க்கும். ஆஹா! எவ்வளவு அருமையான வாசனை!

மினுங்கியும் குனுங்கியும் முல்லைப் பூ மணத்தை நன்றாக முகர்ந்து மகிழும். பிறகு பூக்களைப் பறித்துத் தலையில் வைத்துக்கொள்ளும். அப்போது, புதருக்குள் ஒளிந்திருக்கும் நரியின் மீது கொடிகள் உரசும். அவ்வாறு கொடிகள் கிச்சு கிச்சு மூட்டுவதால் நரி நெளிந்து வளைந்து, "ஹிஹிஹி... ஒ, ஹிஹிஹி!" என்று மெல்லச் சிரிக்கும்.



ஒருநாள் பெரிய மழை பொழிந்தது! குட்டி முயல்கள் வந்த ஆட்டு வண்டி, சேற்றில் சிக்கிக்கொண்டது. மினுங்கியும் குனுங்கியும் முடிந்தவரை பலமாக வண்டியை இழுத்துப் பார்த்தன. ஆனால், வண்டி அசையவில்லை. "இன்று பள்ளிக்குப் போக வேண்டாம்!" என்றன ஆடுகள்.

ஆனால், குட்டி முயல்கள் என்ன செய்தன? மழை பெய்து கொண்டிருந்தாலும் தயங்காமல் வண்டியை விட்டு இறங்கி பள்ளிக்கூடத்தை நோக்கி நடக்கத் தொடங்கின.

அப்போது, யாரோ குடையுடன் ஓடி வருவதுபோலத் தெரிந்தது. அது யார்? வேறு யாருமல்ல, அந்த நரிதான்!

நரி, குட்டி முயல்களைத் தூக்கிக் கொண்டது. அவற்றுக்குத் தலை துவட்டிவிட்டது. பள்ளிப் பைகளை உதறி அவற்றில் இருந்த ஈரத்தைப் போக்கியது. ஒரு கையால் குட்டி முயல்களைத் தூக்கிக்கொண்டு, மறு கையால் குடை பிடித்தபடி பள்ளிக்கூடத்தை நோக்கி நடந்தது.

போகும் வழியில் அந்த நரி, குட்டி முயல்களுக்கு குச்சி மிட்டாயும், கடலை மிட்டாயும், பழச்சாறும், நோட்டுப் புத்தகங்களில், ஒட்டிக்கொள்ள ஆமை ஸ்டிக்கர்களும் வாங்கிக் கொடுத்தது. பள்ளிக்குச் சென்றதும் குட்டி முயல்களை இறக்கி விட்டுவிட்டு முத்தங்கள் கொடுத்து அனுப்பியது.

நடந்ததை எல்லாம் டீச்சரிடம் சொன்ன குட்டி முயல்கள், "இனி எங்களுக்கு ஆட்டு வண்டி வேண்டாம்!" என்றன. இதை அறிந்த தலைமை ஆசிரியர், "இப்படிப்பட்ட தங்கமான நரியை நான் பார்த்ததே இல்லையே!" என்றார்.

எல்லோருமே அந்த நரியைப் பார்க்க விரும்பினார்கள். ஆனால், முல்லைக் கொடிப் புதரில் சென்று பார்த்தபோது, நரி அங்கே இல்லை. பிறகு அது வரவே இல்லை! அதைப் பார்க்காமல் குட்டி முயல்கள் மிகவும் வருந்தின!



– ஓவியம் : ப. செந்தில்குமார்

# பெயர்கள் தெரியுமா?

தமிழில் நன்கு அறிமுகமான சொற்களின் ஆங்கிலப் பெயர்களை அறிவோம்

ஏரி
Lake (லேக்)

பனிப்பாறை
Iceberg (ஐஸ்பெர்க்)

கால்வாய்
Canal (கேனல்)

பெருங்கடல்
Ocean (ஓசன்)

நீர்வீழ்ச்சி
Waterfalls (வாட்டர் பாஃல்ஸ்)

நதி
River (ரிவர்)

வெந்நீர் ஊற்று
Geyser (கெயிசர்)

நீர் இணைப்பு
Strait (ஸ்டெரைட்)

– சந்தியா

# வகைப்படுத்துவோம்!

படங்களில் எவை இயற்கையான பொருட்கள், எவை மனிதரால் உருவாக்கப்பட்ட பொருட்கள் என்று வகைப்படுத்துக:

கைப்பேசி
Mobile phone (மொபைல் ஃபோன்)

ஆறு
River (ரிவர்)

சூரியன்
Sun (சன்)

கப்பல்
Ship (சிப்)

இயற்கைப் பொருட்கள்

மனிதரால் உருவாக்கப்பட்ட பொருட்கள்

சூரியகாந்திப் பூ
Sunflower (சன் ஃப்ளவர்)

புத்தகம்
Book (புக்)

விமானம்

விமானம்
Aeroplane (ஏரோபிளேன்)

பனித்துளி
Dew drop (ட்யூ ட்ராப்)

– திவ்யா

விடைகள் : இயற்கைப் பொருட்கள் : ஆறு, சூரியன், சூரியகாந்திப் பூ, பனித்துளி,
மனிதரால் உருவாக்கப்பட்ட பொருட்கள் : கைப்பேசி, கப்பல், புத்தகம், விமானம்

# காகிதத்தில் பூனை செய்வோம்!



1. சதுர வடிவிலான காகிதத்தைப் பாதியாக மடிக்கவும்





2. பாதியாக மடித்துக் கோடு உருவாக்கவும்



3. புள்ளிக்கோட்டில் மடிக்கவும்



4. திருப்பவும்



5. முகத்தை வரைந்து கொள்ளவும்

ஓரிகாமி (Origami) எனப்படும் காகித மடிப்புக்கலை, ஜப்பானிய பாரம்பரியக் கலையாகும். ஜப்பான் மொழியில் ஓரி என்றால் மடித்தல். காமி என்றால் காகிதம். இந்த இரண்டு வார்த்தைகள் சேர்ந்துதான் ஓரிகாமி என்று அழைக்கப்படுகிறது. இந்தக் கலையில் காகிதங்கள் வெட்டி ஒட்டப்படுவதில்லை, பசைகள் பயன்படுத்தப்படுவதில்லை. இந்தக் கலையில் நாம் இப்போது பூனைத் தலையை உருவாக்கியுள்ளோம்.

# கைகோத்து நிற்கும் தோழிகள்!

1. உங்கள் தேவைக்கு ஏற்றபடி வண்ணக் காகிதம் ஒன்றை எடுத்துக் கொள்ளுங்கள். அல்லது பல நிறத் துண்டுக் காகிதங்களை ஒட்டியும் ஒரு தாளைத் தயார் செய்து கொள்ளலாம்.
2. இப்போது படத்தில் உள்ளது போன்று தாளை மடிக்க வேண்டியதுதான்.
3. வேறு ஒன்றும் வேலை இல்லை, படத்தில் காட்டியபடி பொறுமையாக வெட்டுங்கள்.
4. வெட்டப்பட்ட பகுதியை நீக்கிவிட்டுப் பார்த்தால் இப்படி இருக்கும்!
5. இதை விரித்துப் பார்த்தீர்கள் என்றால், கைகோத்து நிற்கும் தோழிகள் தோன்றுவார்கள்!











ஓவியம் : கு. ஜெயராஜ்

- பிரியா

# புதிய நூல்கள்















## சமத்துவ உரிமை

ஆணும் பெண்ணும், இந்தப் பூமியில் மனிதராகப் பிறந்த அனைவரும் சமம். சட்டங்களை மீறி நடப்பது குற்றம். சட்டத்தின் முன் அனைவரும் சமம். சாதி, மதம், மொழி, இனம் என, எதிலும் ஏற்றத் தாழ்வு கிடையாது. சமூக உரிமை, பேச்சுரிமை, எழுத்துரிமை, கூடி வாழும் உரிமை, விரும்பிய மதத்தைப் பின்பற்றும் உரிமை, கல்வி கற்கும் உரிமை முதலிய நம் பல்வேறு உரிமைகளைப் பற்றி கற்பிக்கிறது இந்தப் புத்தகம்.

M.S. பொற்கொடி

விலை ரூ. 35/-

## நான் யார்?

ஒருவர் எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம்! ஒருவரின் தோற்றத்தைக் குறிப்பிட்டுக் கேலி செய்ய எவருக்கும் உரிமை இல்லை என்பதை அழகாகச் சொல்லும் நூல் இது.

'நம் உடல் நம்முடையது, ஒவ்வொரு உடலும் தனித்துவமானது, நம் உடல் அற்புதமான ஒன்று' என்பதை நம் மனதில் பதியவைக்கும் புத்தகம்.

சாலை செல்வம்

விலை ரூ. 35/-

## நலம் தரும் நல்ல உணவு

"நாளும் வாழ்ந்து வளரவும்,

வலிமை பெற்று உழைக்கவும்,

நோயை வென்று கடக்கவும்,

ஊட்டம் நமக்கு வேண்டுமே!"

என்று இந்தப் புத்தகம் பாடல் வடிவிலேயே, நாம் சாப்பிட வேண்டிய நல்ல உணவுகளை எடுத்துச் சொல்கிறது!

வெற்றிச்செழியன்

விலை ரூ. 35/-

## காசு

பணம் என்ற ஒன்று எப்படி வந்தது? இயற்கைப் பொருட்களுக்கு விலை எப்படி வந்தது? 'பயன் மதிப்பு' என்றால் என்ன? உழைப்பு எப்படி ஒரு பொருளின் மதிப்பைத் தீர்மானிக்கிறது? சந்தை எப்படி வந்தது? காகிதப் பணம் வருவதற்கு முன்பு எவையெல்லாம் பணமாகப் பயன்படுத்தப்பட்டன என்பவற்றின் மூலமாக, பணத்தின் கதையைச் சொல்லிக் கொடுக்கும் பயன் மிகுந்த புத்தகம்.

ச. தமிழ்ச்செல்வன்

விலை ரூ. 35/-

## மானுடப்பயணம்

சிறுவர்கள் மதியழகனும் இளமுருகும் ஒரு குன்றின் மீது ஏறுகிறார்கள். அங்கே பழங்கால மனிதர் ஒருவரைப் பார்க்கிறார்கள். அதன் பிறகு அவர்கள் காலத்தில் வெகுதூரம் முன்னே பயணிக்கிறார்கள். அங்கே, ஆதிகால மனித இனங்களைச் சேர்ந்தவர்களான 'சேப்பியன்ஸ்', 'ஹோமோ எரக்டஸ்', 'நியாண்டர்தால்', 'ஹோமோ ஹாபிலஸ்', 'ஆஸ்ட்ரோ பிதிகஸ்' ஆகியோரைச் சந்திக்கிறார்கள். மனிதர்கள் உருவாகி, பல இடங்களுக்குப் பரவி முன்னேறியதைப் பற்றிய சுவை மிகுந்த கதை இது. – உதயசங்கர் – விலை ரூ. 45/-




இந்த ஐந்து நூல்களையும் அழகிய படங்களுடன் வெளியிட்டிருப்பது,

**தமிழ்நாடு பாடநூல் மற்றும் கல்வியியல் பணிகள் கழகம்,**

எண். 68, ஈ.வெ.கி. சம்பத் மாளிகை, கல்லூரிச் சாலை, டி.பி.ஐ. வளாகம், நுங்கம்பாக்கம், சென்னை – 600 006.

# சித்திரச்



S. கௌஷிகா, மூன்றாம் வகுப்பு,
ஊ.ஒ.ந.பள்ளி,
கேலவள்ளி. தருமபுரி



K. ரிஷிதரன், ஏழாம் வகுப்
ஊ.ஒ.ந.நி. பள்ளி, மொழையூர்
தஞ்சாவூர் மாவட்டம்.



ரா. சுஷில் கிருஷ்ணன், ஆறாம் வகுப்பு,
ஊ.ஒ.ந.நி. பள்ளி, செம்மம்பாடி.
திருவண்ணாமலை



ம.புகழேந்தி, ஆறாம் வகுப்பு,
ஊ.ஒ.ந.நி. பள்ளி, பத்தியவாடி,
கலசபாக்கம் ஒன்றியம்,
போளூர் கல்வி மாவட்டம்.



s.தர்ஷிகா, மூன்றாம் வகுப்பு
ஊ.ஒ.தொ. பள்ளி,
மணமேல்பட்டி. சிவகங்கை மாவட்டம்.

# சோலை



பா. அன்பரசன், மூன்றாம் வகுப்பு,
ஊ.ஒ.தொ.பள்ளி, மணமேல்பட்டி,
சிவகங்கை மாவட்டம்.




டி.கெவின், மூன்றாம் வகுப்பு,
ஊ.ஒ.தொ.பள்ளி,
கீழ்கொடுங்கலூர்,
திருவண்ணாமலை மாவட்டம்.



B.ஹரிஸ் சேனன், ஆறாம் வகுப்பு
G.T.R. உயர்நிலைப் பள்ளி,
அரசவேலி. திருவண்ணாமலை



மு.சுவேதா, 5ஆம் வகுப்பு,
ஊ.ஒ.தொ.பள்ளி,
வெளியம்பாக்கம்,செங்கல்பட்டு.

# இந்தியாவின் புகழ்பெற்ற நினைவுச் சின்னங்கள்

விஜயா

## தாஜ்மகால்
[TAJMAHAL]

உலக அதிசயங்களில் ஒன்றான இது, ஆக்ராவில் அமைந்துள்ளது. முகலாய மன்னர் ஷாஜஹான், இறந்து போன தன் மனைவி மும்தாஜ் நினைவாக, 16ஆம் நூற்றாண்டில் கட்டினார்.







## இந்தியாவின் நுழைவாயில்
(GATE WAY OF INDIA)

இது, மும்பையில் இருக்கிறது. ஆங்கிலேயர்கள் 1924ஆம் ஆண்டு இதைக் கட்டினார்கள். படகுகளில் வருபவர்கள் முதலில் இந்தக் கட்டடத்தைத்தான் எதிர்கொள்வார்கள். அதனால் இது இந்தியாவின் நுழைவாயில் என்று அழைக்கப்பட்டது.

## சார்மினார்
[CHARMINAR]

ஹைதராபாதில் உள்ள பள்ளிவாசல் இது. 1591ஆம் ஆண்டு, முகம்மது குலி குப் ஷா என்பவரால் கட்டப்பட்டது




## தாமரைக் கோயில் [LOTUS TEMPLE]

தில்லியில் உள்ள வழிபாட்டுத்தலம். தாமரை மலர் போன்ற வடிவத்தின் காரணமாகத் தாமரைக் கோயில் என அறியப்படுகிறது. 1986ஆம் ஆண்டு கட்டப்பட்டது.




## சாஞ்சி ஸ்தூபி
[SANCHI STUPA]

மத்தியப் பிரதேசத்தில் இருக்கிறது. இது, புத்தரின் நினைவுப் பொருட்களின் மீது அமைக்கப்பட்ட ஓர் அரைக்கோள வடிவச் செங்கல் கட்டடம். கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் பேரரசர் அசோகரால் கட்டுவிக்கப்பட்டது.




## விக்டோரியா அரண்மனை (VICTORIA PALACE)

கொல்கத்தாவில் அமைந்துள்ள விக்டோரியா அரண்மனை, இங்கிலாந்து விக்டோரியா மகாராணியின் நினைவிடம். அவர் இந்தியாவின் பேரரசி என்ற பட்டத்தையும் பெற்றவர். 1921ஆம் ஆண்டு கட்டப்பட்ட இது, தற்போது அருங்காட்சியகமாகவும் சுற்றுலா தலமாகவும் இருக்கிறது.




## ஹவா மஹால் [HAWA MAHAL]

ஹவா மஹால் என்றால், 'தென்றல் வீசும் அரண்மனை' என்று பொருள். ஜெய்ப்பூரில் இருக்கிறது. 1799ஆம் ஆண்டில் ஜெய்ப்பூர் மன்னர் சவாய் பிரதாப் சிங் கட்டினார்.



# பூனை இரண்டு, குருவி ஒன்று

“கீக்கீ” என்றே பாடியது குருவி

அதை இரண்டு பூனைகள் கேட்டன.

“எனக்குத்தான் குருவி” என இரண்டு பூனைகளும்

மோதிக் கொள்ள, தப்பித்தது குருவி!

# பெரிய யானை சின்ன யானை



### பெரிய யானை!

நிலத்தில் வாழும் உயிரினங்களில் மிகவும் பெரியது யானை. அவற்றில் பெரியது ஆப்பிரிக்க யானை. ஆப்பிரிக்க யானைகளில் ‘ஆப்பிரிக்க சாவன்னா யானை’ (African Savanna Elephant), ‘ஆப்பிரிக்க பாரஸ்ட் யானை’ (African Forest Elephant) என்று இரண்டு இனங்கள் உள்ளன. இதில், சாவன்னா யானைதான் மிகவும் உயரமானது. ஏறத்தாழ நான்கு மீட்டர் உயரம் இருக்கும். இதன் எடை சுமார் 6,000 கிலோகிராம்!

### சின்ன யானை

ஆசிய யானைக் குடும்பத்தைச் சேர்ந்த ‘போர்னியோ பிக்மி’ (Borneo Pygmy), உலகத்திலேயே சிறிய யானை. மலேசியாவைச் சேர்ந்த இந்தக் குட்டி யானை, ஏறத்தாழ 2.6 மீட்டர்வரைதான் உயரம் இருக்கும். அழிந்து வரும் உயிரினங்களின் பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ளது.



# உயிரினம் அறிவோம்!



### இளஞ்சிவப்பு வெட்டுக்கிளி [Pink Grasshopper]

இங்கிலாந்தில் ‘இப்விச்’ (Ipswich) எனும் இடத்தில் காணப்பட்ட அரிய வகை இளஞ்சிவப்பு வெட்டுக்கிளி இது. ரிச்சர்ட் டெய்லர் (Richard Taylor) எனும் ஒளிப்படக்காரர் எடுத்த படத்தைத்தான் பார்க்கிறீர்கள்.



### மண்ணுக்குள் மறையும் சிலந்தி [Sicarius spider]

‘சிகாரியஸ்’ எனும் இந்த சிலந்தி, இரண்டு கால்களால் மணலை வாரி தன் உடலின் மீது போட்டுக்கொண்டு சில நொடிகளில் மணலுக்குள் மறைந்துவிடும். இது ஏன் இப்படிச் செய்கிறது? மறைந்திருந்து இரை பிடிக்கவும் எதிரிகளிடம் சிக்காமல் ஒளிந்து கொள்வதற்கும்தான். இது தெற்கு அமெரிக்காவில் இருக்கிறது.



### விஷத் தவளை

பளபளக்கும் தங்க நிறத்தில் இருக்கும் இந்தத் தவளையைத் தொட்டாலே கடும் விஷம் பாதிக்கும்! ‘தங்கநிற விஷத் தவளை’ (Golden Poison Frog) எனும் தவளைதான் இது! இது நம் சுட்டுவிரலின் நீளம்கூட இருக்காது. ஆனால், உலகத்திலேயே மிகக் கடும் விஷம் கொண்ட பிராணி இது! இந்த சின்னஞ்சிறு தவளையின் விஷம் பத்து மனிதர்களைக் கொல்வதற்குப் போதுமானது!



### நீளக் கழுத்து ஆமை [Eastern long-necked turtle]

ஒட்டகச்சிவிங்கியைப்போல நீண்ட கழுத்துள்ள ஆமை ஆஸ்திரேலியாவில் இருக்கிறது. இதன் கழுத்து, ஏறத்தாழ அதன் உடல் அளவு நீளம் இருக்கும். நீளமான கழுத்து இருப்பதால், இந்த ஆமைகளுக்கு மற்ற சாதாரண ஆமைகளைப்போல பட்டென்று தலையை ஓட்டுக்குள் இழுத்துக்கொள்ள முடியாது. இவை கழுத்தை வளைத்து ஓட்டுக்குள் நுழைத்துக் கொள்வதற்குச் சற்று நேரமாகும். இப்படி நீண்ட கழுத்து உள்ள ஆமை இனங்களுக்கு, ‘பாம்புக் கழுத்து ஆமைகள்’ (Snake–necked turtle) என்று பெயர்.



### கொக்கின் தந்திரம்

கருங்கொக்கு (Black Heron), மீன்களைப் பிடிப்பதற்காக ஒரு தந்திரம் செய்யும். அது என்ன? தன் இறக்கைகளை குடைபோல விரித்துக்கொண்டு தண்ணீரில் அமர்ந்திருக்கும். அப்போது மீன்கள் அந்த இறக்கைகளின் நிழலுக்கு ஓடி வரும். அப்புறம் என்ன? கருங்கொக்கு சுலபமாக மீன்களைப் பிடித்துத் தின்னும்.

# வரையலாம் வாங்க!



ஓவியங்கள் : நீ. நவநீதகிருஷ்ணன்

# புதிர்கள்

**1** மறைந்துள்ள எண்களைக் கண்டுபிடியுங்கள்



**2** இந்தப் படத்தில் எத்தனை கிளிகள் இருக்கின்றன?



**3** படங்களில் இருக்கும் கண்கள் எந்த விலங்குகள், பறவைகளுடையவை என கீழே டிக் செய்யவும்



1. எருமை ◯
2. குதிரை ◯
3. யானை ◯



1. பாம்பு ◯
2. பல்லி ◯
3. தவளை ◯



1. புலி ◯
2. கரடி ◯
3. சிங்கம் ◯



1. மைனா ◯
2. கிளி ◯
3. காகம் ◯

விடைகள் அறிய பக்கம் 20க்கு வாங்க!

# என் நண்பர்கள்



எழுதியவர் : ருக்மினி பேனர்ஜி
ஓவியம் : ராஜீவ் வர்மா 'பஞ்சாரா'
மொழிபெயர்ப்பு : பிரபா ராம், ஷீலா பெருயிட்
நன்றி : ப்ரதம் புக்ஸ்



















சில நண்பர்கள் ஊர்கின்றனர்...


சில நண்பர்கள் நீந்துகின்றனர்... சிலர் பறக்கின்றனர்


புத்தகங்களும் என் நண்பர்கள்தான்!


ஆனால் என் மிகச்சிறந்த நண்பர் யார்? யார்? யார்?

என் அம்மா!

# மயிலே மயிலே



- ஓவியம் : ப. செந்தில்குமார்

மயிலே, மயிலே ஆடிவா
மக்காச் சோளம் தருகிறேன்!

குயிலே, குயிலே பாடிவா
கோவைப் பழங்கள் தருகிறேன்!

பச்சைக் கிளியே பறந்துவா
பழுத்த கொய்யா தருகிறேன்!

சிட்டுக் குருவி நடந்துவா
சட்டை போட்டு விடுகிறேன்!

ஓடைக் கொக்கு இங்கே வா
ஓடிப் பிடித்து ஆடலாம்!

மாடப் புறாவே இறங்கிவா
மடியில் குந்திப் பேசலாம்!

நன்றி : www.tamillexicon.com

# விடுகதைகள்



1. அக்கரையில் ஒன்று, இக்கரையில் ஒன்று, இரண்டும் அடிக்கடி மோதிக் கொள்ளும்! அவை என்ன?
2. வாய் சின்னது, வயிறோ மிகப் பெரியது! அது என்ன?
3. தொட்டால் துன்பம்! அது என்ன?
4. ஒரு புட்டியில் இரண்டு எண்ணெய்! அது என்ன?
5. பார்த்தால் பூத் தட்டு, தட்டில் தீ! அது என்ன?

விடைகள் :
1. இமைகள், 2. குடம், 3. நெருப்பு, 4. முட்டை, 5. சூரியன்.

## 17ஆம் பக்க விடைகள் :

1



2

எத்தனைக் கிளிகள் :
17 கிளிகள்.

3


யானை


தவளை


சிங்கம்


கிளி



சைல்டு லைன்
1098
(குழந்தைகள் பாதுகாப்பு உதவி மையம்)

- இது இலவச தொலைபேசி எண்
- இரவு - பகல் எந்த நேரமும் அழைக்கலாம்
- உங்களுக்கு என்ன உதவி தேவை என்றாலும் இந்த எண்ணிற்கு அழையுங்கள்

# பழங்கள்-FRUITS



ஆப்பிள் - APPLE

தர்ப்பூசணி – WATER MELON





அன்னாசி – PINEAPPLE

பேரிச்சம்பழம் – DATES





மாம்பழம் - MANGO

முந்திரிப்பழம் – CASHEW FRUIT





திராட்சை - GRAPES

சீத்தாப்பழம் – CUSTARD APPLE





கொய்யா – GUAVA

அத்திப்பழம் – FIG





பலாப் பழம் – JACK FRUIT

தோடம்பழம் – ORANGE





வாழைப் பழம் – BANANA

எலுமிச்சம்பழம் – LIME



- ஆசை தம்பி

# வௌவாலும் தவளையும் ஏன் அழுதன?

குளக்கரையில் உட்கார்ந்திருந்தது ஒரு தவளை. பக்கத்திலிருந்த மரத்தின் கிளையில் யாரோ தொங்கிக் கொண்டிருப்பது தெரிந்தது.

"அங்கே தலைகீழாகத் தொங்கி சர்க்கஸ் காட்டுவது யார்?" என்று கேட்டது தவளை.

"நான் ஒரு வௌவால்!"

"நீ ஏன் இப்படி தலைகீழாக நின்றுகொண்டிருக்கிறாய்? உனக்கு மூளை குழம்பிவிட்டதா? உடனே நீ ஒரு மருத்துவரைப் பார்!"

"நான் நேராகத்தான் நிற்கிறேன். என்னால் இப்படித்தான் நிற்க முடியும்!"

"என்னை யாராலும் ஏமாற்ற முடியாது. நீ தலைகீழாகத்தான் நிற்கிறாய்!"

"நான் நேராகத்தான் நிற்கிறேன். நீங்கள்தான் தலைகீழாக நிற்கிறீர்கள்!"

"மறுபடியும் சொல்கிறேன். நீதான் தலைகீழாக நிற்கிறாய். நேராக நிற்க முயன்று பார்!"

'எவ்வளவு முறை எடுத்துச் சொன்னாலும் இந்தத் தவளைக்கு விஷயம் புரியவில்லையே... நான் என்ன செய்வேன்!' என்று நினைத்து வௌவால் தேம்பித் தேம்பி அழுதது!

'எத்தனை முறை சொன்னாலும் இந்த வௌவால் கேட்க மாட்டேன் என்கிறதே' என்று நினைத்து தவளையும் குமுறிக் குமுறி அழுதது!

– ராமகிருஷ்ணன் குமரநல்லூர்

# Why did the bat and the frog cry?

A frog was sitting on the bank of the pond. It was seen that someone was hanging from the branch of the nearby tree.

"Who is hanging upside down over there and doing the circus?" asked the frog.

"I am a bat!"

"Why are you standing upside down like this? Are you out of your mind? See a doctor immediately!"

"I am standing straight. I can stand like this!"

"Nobody cheated me. Cannot. You are upside down!"

"I am standing straight. You are the one standing upside down!"

I'll say it again. You are standing up–side down. Try to stand up straight!"

"No matter, how many times I tell. This frog doesn't under–stand... What will I do! the bat cried.

The frog started crying and crying because he thought, "No matter how many times I tell him, this bat won't listen'!



- ஓவியம் : ப. செந்தில்குமார்

# காவிரி

கரை புரண்டு ஓடுதம்மா – அந்த
காவிரியில் தண்ணி எங்கும்!

நெளி நெளியா ஓடுதம்மா – அந்த
நீல வண்ணத் தண்ணி எல்லாம்!

சுழி சுழியா ஓடுதம்மா – அந்த
சுத்தமான ஆத்துத் தண்ணி!

வெயிலடிக்கும் நேரமெல்லாம் - தண்ணி
வெள்ளி போல மின்னுதடி!

தெய்வம்போல இருக்கும் தண்ணி – கண்மணியே
திசையோடும் பச்சைத் தண்ணி!

- நாட்டுப் பாடல்



↘ கேள்வி பதில் பாடல்

# நரியும் சரியும்



மணம் என்றால் பூ தானே?
பூ என்றால் கட்டுவோமே!
கட்டுவது என்றால் பசுதானே?
பசு என்றால் கறப்போமே!
கறப்பது என்றால் பால் தானே?
பால் என்றால் புளிக்குமே!
புளிக்கும் என்றால் புளிதானே?
புளி என்றால் தொங்குமே!
தொங்குவது என்றால் பாம்புதானே?
பாம்பு என்றால் கொத்துமே!
கொத்துவது என்றால் கோழி தானே?
கோழி என்றால் கூவுமே!
கூவும் என்றால் நரிதானே?
நரி என்றால் அதோடு சரி!



- நாட்டுப் பாடல்

– ஓவியங்கள் : ப. செந்தில்குமார்

# அன்பு




அப்துல்லா பேருந்து, பச்சை நிறத்தில் மஞ்சள் நிறப் புள்ளிகளுடன் அழகாக இருக்கும். அது பட்டுக்கோட்டையிலிருந்து தஞ்சாவூருக்கு ஓடிக்கொண்டே இருக்கும்.

அகிலன் பேருந்து, சிவப்பு நிறத்தில் இருக்கும். அதன் முன் பக்கம் மட்டும் நீல நிறம். இந்தப் பேருந்தும் பட்டுக்கோட்டையிலிருந்து தஞ்சாவூருக்குத்தான் ஓடிக்கொண்டிருந்தது.

நிறையப் பயணிகளை ஏற்றிக்கொண்டு விரைந்து செல்லும்போது, அவை இரண்டும் எங்காவது சந்திக்கும். அப்போது இரண்டும், பேசிக்கொள்ள வேண்டும் என்று நினைக்கும். பல கதைகள் பேசி சிரித்து மகிழ வேண்டும் என்று விரும்பும். ஆனால், ஒன்றை ஒன்று திரும்பிப் பார்த்து வணக்கம் சொல்வதற்கு முன்பே, பொறாமைக்காரரைப் போல நடத்துநர் விசில் ஊதிவிடுவார். விசில் ஊதினால் பிறகு ஓடத்தானே வேண்டும்.

இரவில் அப்துல்லா பேருந்து ஆற்றங்கரை ஓரத்தில் தூங்கும். அகிலன் பேருந்து ஏரிக்கரையில் தூங்கும்.

காலையில் இரண்டு பேருந்துகளையும் குளிப்பாட்டுவார்கள். உட்புறத்தைக் கூட்டிச் சுத்தம் செய்வார்கள். பிறகு அவை ஒரே வழியில் தஞ்சாவூருக்குச் செல்லும்.

ஒரத்தநாடு எனும் ஊரை நெருங்கும்போதுதான் அது நடந்தது! அப்துல்லாவின் ஓட்டுநர், பின்னால் வரும் அகிலனுக்கு வழிவிட முற்பட்டார். அப்போது அகிலன் பேருந்து அப்துல்லா பேருந்துடன் லேசாக மோதிவிட்டது!




இரண்டு பேருந்துகளில் பயணம் செய்த அனைவரும் பயந்து கூச்சலிட்டுக்கொண்டு கீழே இறங்கினார்கள். ஒரே களேபரம்! பிறகு பயணிகள் எல்லோரும் சாலை ஓரத்தில் நின்று வேறு பேருந்துக்காகக் காத்திருந்தார்கள்.

அந்த இரண்டு பேருந்துகளும் தனியாகச் சந்திக்க வேண்டும் என்று நீண்ட காலமாகக் காத்திருந்தன அல்லவா. அந்த நேரம் இப்போது வந்துவிட்டது. அப்துல்லா பேருந்து, அகிலன் பேருந்துடன் கைகுலுக்கியது. தோளைத் தொட்டு நலம் விசாரித்தது. பிறகு அந்த நண்பர்கள் வழியில் பார்த்த காட்சிகளை, தங்களுக்குள் பயணித்த மனிதர்களை, ஓட்டுநர்களை, நடத்துநர்களைப் பற்றியெல்லாம் நிறையப் பேசி மகிழ்ந்தார்கள்.

“நாங்கள் ஒருவர் மீது ஒருவர் மோதிக்கொள்ளவில்லை, நண்பர்களே. அன்பாகத் தொட்டுக்கொண்டோம், அவ்வளவுதான்!” என்று பேருந்துகள் சத்தம்போட்டுக் கூறின. ஆனால், அது யாருக்கும் புரியவில்லை. உங்களுக்குப் புரிகிறதா?

– ஷிஜு




– ஓவியம் : ப. செந்தில்குமார்